


# குருசா செய்தி மலர்

குருசாமிபாளையம் செங்குந்தர் பள்ளிகள்
முன்னாள் மாணவர் சங்க வெளியீடு

ஜனவரி 2021 மலர் 2

**நம் பள்ளி சிறக்க வேண்டும்**



திரு. பழனிவேல் ஐபிஸ்
தலைவர்,
குருசாமிபாளையம்
செங்குந்தர் பள்ளிகள்
முன்னாள் மாணவர்கள்
சங்கம்



நம் பள்ளியில் நன்கு படிக்கும் ஏழை மாணவர்களுக்கு உதவி செய்ய நான் தயார்.

## முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார்

பாலப்பாளையம் கிராமம், ஏழை நெசவாளி ஆறுமுகம் முதலியார், தைலம்மாள் தம்பதிகள் மகன், நடுநிலைப்பள்ளி முடித்ததும் மகனை, ஒரு தறிக்காரரிடம் கொத்தடிமையாகச் சேர்த்து விட்டார். காரணம் ஏழ்மை. ஆனால், சிறுவன் படிப்பில் சுட்டி. ஆதலால், அவனது பள்ளி ஆசிரியர்கள் தந்தையிடம் முறையிட்டு படிக்கவைக்க வற்புறுத்தியதால் நம் செங்குந்தர் மகாஜன உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து 1965ம் ஆண்டு பள்ளி இறுதித் தேர்வில் முதல் மாணவனாக தேர்ச்சிபெற்றார்.

மாணவனிடம் பள்ளி தலைமை ஆசிரியர் குழந்தைசாமி கேட்டார். எந்த கல்லூரியில் சேரப் போகிறாய்? என்று. தறி நெய்யப்போகிறேன். கல்லூரிப் படிப்பு படிக்க வசதி இல்லை என்று கூற, தந்தையை அழைத்து வருமாறு கூறினார். ஏன் பையனை கல்லூரி படிக்கச் அனுப்பக்கூடாது? என்று கேட்டதற்கு வந்த பதில், "வசதி இல்லைங்க சார்" நம்முடைய பள்ளி ஆசிரியர்கள் நிதி உதவி செய்து மாணவனை திருச்சி நேஷனல் கல்லூரியில் சேர்த்தனர். பின்னர் செயிண்ட் ஜோசப் கல்லூரியில் இளம்கலை முதுகலை கணிதம் பட்டத்தை முதல் வகுப்பில் தேர்ச்சி அடைந்தார். மிகுந்த பணக் கஷ்டங்களை சந்தித்த இவருக்கு மெஸ் பில் கட்ட உதவிய துறையூர் முதலியார் ஒருவர் பேருதவி அளித்தார். அவர் தான் பின்னர் ஐபிஸ் தேர்வில் வெற்றி பெற்ற A. பழனிவேல் ஐபிஸ்.





முதல் படம், உத்திரப் பிரதேச கவர்னர், 2005 ஆம் ஆண்டு குடியரசுத் தலைவரின் போலீஸ் பதக்கத்தை பழனிவேல் ஐபிஸ் அவர்களுக்கு வழங்குகிறார்.

இரண்டாம் படம் இருவருமே நம் மண்ணின் மைந்தர்கள். இருவரும் ஐபிஸ் அதிகாரிகளாக தேர்வு ஆனவர்கள். ஒருவர் உத்திரப்பிரதேச கவர்னர் திரு. தங்கவேலு ராஜேஸ்வர், அடுத்தவர் உத்திரப்பிரதேச காவல் துறை தலைவர் நம் பழனிவேல் ஐபிஸ் அவருடன் கை குலுக்குகிறார்.

**தங்களின் சாதனை எங்களை உற்சாகப்படுத்துகிறது**


செங்குந்தர் மகாஜன மேல்நிலைப்பள்ளி
85.R.கொமாரபாளையம்
தா.மாரிமுத்து முதலியார் குமாரர்
அருணாசல பிரதேச கவர்னர்
மேதகு T.V.ராஜேஸ்வர், I.P.S.,
அவர்களால் இந்த அறை உபயம்.
9-6-1985.



# குருசா செய்தி மலர்

குருசாமிபாளையம் செங்குந்தர் பள்ளிகள்
முன்னாள் மாணவர் சங்க வெளியீடு

ஜனவரி 2021 மலர் 3 பக்கம் 1

நம் பள்ளி சிறக்க வேண்டும்

## பாவு தோஞ்ச பணத்தில் படித்தேன்



**DR. வெங்கட் மணி,**
தலைமைச் செயல்அலுவலர்,
ஆம்செம்டெக் இன்க்,
ஸ்ப்ரிங் மில்ஸ்,
பென்சில்வேனியா, அமெரிக்கா.

நம் குருசாமிபாளையம் செங்குந்தர் பள்ளிகள் முன்னாள் மாணவர்கள் சங்க ஆயுட்காலஉறுப்பினர்

பாலப்பாளையம் கிராமம் எனது ஊர். அப்பா மணி முதலியார், எங்க அம்மா வள்ளியம்மாள். ஒரு எளிய நெசவாளர் குடும்பம். தினமும் பாவடியில் பாவு தோய்ந்த பின்னர் தான் பள்ளி செல்லமுடியும். பக்கத்துப் பாவில், எனது பால்ய நண்பன் (பழனிவேல் ஐபிஸ்) பாவு தோய்வான். யார் சீக்கிரமாக பாவு தோய்ந்துவிட்டு பள்ளிக்கூடம் செல்வது என்று போட்டி போட்டுக் கொண்டு பாவு தோய்வோம். ஒரு நாள் பாவுக்கு நின்றால் இருபத்து ஐந்து பைசா கூலி கிடைக்கும். அதை வைத்து தான் எனது பள்ளிக்கூடச் செலவுகளைச் செய்தாக வேண்டும். அப்பா பணம் தரமாட்டார்.

மற்ற பையன்களின் வாழ்க்கையில் நிகழ்ந்தது போலவே, எனது தந்தையாரும் என்னைப் பலமுறை பிணையக் கூலியாகத் தறிக்குப் பேசிப்போட வற்புறுத்தினார். பல முறை இதுபற்றி எங்கள் இருவருக்கும் வாக்குவாதம் நிகழும். என் தந்தை என்மீது கடுமையாக கோபித்துக் கொண்ட தருணங்களும் உண்டு. எனக்கு படிப்பின் மீது தணியாத ஆசை. நான் சம்பாதித்த பணத்தை வைத்து பள்ளி ஸ்பெஷல் பீஸ் கட்டிக்கொள்வேன்.

ஆரம்ப பள்ளி, ஐந்தாம் வகுப்புவரை புதூரில். ஆறு முதல் எட்டு வகுப்புவரை வெங்கடேஸ்வரா நடுநிலைப் பள்ளி ஆண்டகளூர்கேட். கேட் பள்ளித் தலைமை ஆசிரியர் என் அன்பு தெய்வம் ஆசிரியர் தங்கவேல் பண்டாரம். என்னை அவர் ஊக்குவிப்பார், உற்சாகப்படுத்துவார். என்மீது அவர் காட்டிய அன்பு என்னை கடினமாக உழைக்கத் தூண்டியது. எட்டாம் வகுப்பு பொது தேர்வில் மாவட்டத்தில் முதல் மதிப்பெண் பெற்றேன்.





அதை எனது ஆசிரியர் தங்கவேல் பண்டாரம் மற்றவர்களிடம் சொல்லும்போது எனக்கு கிடைத்தது ஆத்ம திருப்தி. என் மீது பாசம் கொண்ட ஆசிரியருக்கு, இந்த ஏழை மாணவன் தந்த குரு தட்சனை இதுதான். ஒன்பதாம் வகுப்பில் சென்று செங்குந்தர் மகாஜன பள்ளியில் சேர்ந்தேன். பள்ளி மாறினாலும் ஆசிரியர் என்மீது கொண்ட பாசம் மாறவேயில்லை. என் நலனில் தொடர்ந்து அக்கறை காட்டிவந்தார். இது நான் செய்த பூர்வ ஜென்மம் புண்ணியம். நான் படித்து முன்னேறி அமெரிக்கா சென்ற பின்னரும் , ஒவ்வொரு முறை இந்தியா வருகின்ற பொழுதெல்லாம் அவரைச் சந்தித்து தவறாமல் ஆசி பெறுவேன்



ஆசிரியர்
தங்கவேல் பண்டாரம்

**My God Father**

" சீடன் தயாராக இருந்தால், குரு அவன்முன்தோன்றுவார் "
- ஜென் பழமொழி

**ஆசிரியர் தங்கவேல் பண்டாரம் எனது வாழ்க்கையில் கிடைத்த ஒளிவிளக்கு**

# குருசா செய்தி மலர் ...



நம் பள்ளி சிறக்க வேண்டும்



நான் உழைக்க அஞ்சமாட்டேன்





ஆசிரியர்கள் பரமசிவம் கதிர்வேல்ஜி அவர்களுடன்



E G. கோவிந்தன்,
கமடோர் (ஓய்வு)
இந்திய கப்பல் படை

செங்குந்தர் மகாஜன பள்ளியில் தலைமை ஆசிரியர் குழந்தைசாமிசார், துரைசாமிசார் இருவரும் மிகச் சிறந்த ஆசிரியர்கள். ஆங்கில இலக்கணம் அருமையாக சொல்லித் தருவார்கள். என்னுடைய நண்பர்கள் கே. பி. கந்தசாமி, ஸ்ரீரங்கன், காளியண்ணன், நடேசன், பரமசிவம், பாலுசாமி, ஞானசம்பந்தம், பாலசுப்ரமணியம் இவர்கள் அனைவரும் நல்ல படிப்பாளிகள். படிப்பில் மட்டுமன்றி விளையாட்டிலும் பள்ளி மாவட்ட அளவில் பல கோப்பைகளை வென்று வந்தது. ஹிந்தி பண்டிட் கதிர்வேல் அவர்களுடன் பழகும் வாய்ப்பும் கிடைத்தது.

காலையில் பெரும்பாலும், அவசர ஓட்டத்தால் சாப்பாடு கிடையாது. மதியம் பாவடியில் இருந்த வெங்கான்கடை பட்டை சாதத்தை பருக்கை விடாமல் சாப்பிடுவேன். எங்கள் காலத்தில் எஸ்.எஸ்.எல்.சி மதிப்பெண்கள் தனியாக மார்க் ஷீட் வடிவில் வராது. ஒரு புக் வடிவில் இருக்கும் எஸ்.எஸ்.எல்.சி புக்கில் மதிப்பெண்கள் எழுதி வரும். முதலில் புக் வரவில்லை என்றால் பரீட்சையில் பெயில் என்று அர்த்தம். எல்லாருக்கும் புக் வந்துவிட்டது ஆனால் எனக்குமட்டும் புக் வரவில்லை. எல்லாரும் வெங்கடாச்சலம் பெயில் ஆயிட்டான் என்று சொல்ல ஆரம்பிச்சுட்டாங்க. நான் கதறிக்கதறி அழுதேன். என்னை அழாதே! என்று ரைட்டர் நாராயணன் சொல்லிய ஆறுதல் வார்த்தைகள் இன்னும் என் காதுகளில் ஒலிக்கிறது. என்னுடைய எஸ்.எஸ்.எல்.சி புக், அடுத்த சில நாட்களில் வந்துவிட்டது

**நான் தான் எஸ்.எஸ்.எல்.சி தேர்வில் முதல் மதிப்பெண் பெற்றவன்**



எனது மதிப்பெண்கள் கிடைக்க காலதாமதம் ஆனதால், நானும் எனது குரு தங்கவேல் பண்டாரம் அவர்களும் செயிண்ட் ஜோசப் கல்லூரியில் சேர போனபோது கல்லூரியில் இடம் இல்லை என்று கூறிவிட்டனர். எனக்கு பெருத்த ஏமாற்றம். அதிர்ந்து நின்றேன். என்னை அழைத்துக்கொண்டு வந்த தங்கவேல் பண்டாரம் சார் கண்ணீர் விட்டு அழ ஆரம்பித்து விட்டார். இதைப் பார்த்த காலேஜ் பிரின்சிபால் நீங்கள் இந்த பையனின் அப்பாவா? என்றார். இல்லை சார் நான் இவனது பள்ளி ஆசிரியர் என்றார். ப்ரின்சிபாலுக்கு ஒரே ஆச்சரியம். **என்ன ஆச்சரியம் ? ஒரு மாணவனுக்கு இடம் கிடைக்கவில்லை என்று ஆசிரியர் அழுகிறார் !**. உடனே அருகில் அழைத்து அமரச் சொல்லி, எனக்கு அட்மிசன் தந்தார். எனக்கு அவர் உறவினரும் இல்லை. ஏன்? அவர் என்னுடைய இனம்சார்ந்தவரும் அல்லர். என் வாழ்க்கையில் உதவிட வந்த மகான். **கடமை உள்ளம் கொண்ட ஆசிரியர்கள், கல்விக் கடவுள்கள்.**

அதே கல்லூரியில் இளம்கலை வேதியல் படித்தேன். ஸ்காலர்ஷிப் பணத்தில் தான் மெஸ் பில் கட்டமுடியும். ஒருமுறை கடந்த மூன்று மாதமாக மெஸ் பில் கட்டாததால் பாதர் இருதயம் எப்படியாவது கட்டிவிடு என்றார். கட்டுவதற்குப் பணம் இல்லை. அதனால் படிப்பை விட்டுவிட்டு ஊருக்கே போவதற்கு மூட்டை கட்டிவிட்டேன். ஊருக்கு போவதற்கு முன் என் நண்பன் கோவிந்தனைப் பார்க்க ஆர்.சி சென்று விவரம் கூறினேன். தனக்கு வாட்ச் வாங்க வைத்திருந்த பணத்தை எனக்குக் கொடுத்து உதவினான். வாழ்கையில் முன்னேற பலர் எனக்கு உதவிக்கரம் நீட்டினர். அதில் எனது பெரிய அக்கா ரேணுகா அவர்களின் பங்கு மிகப் பெரியது.




# குருசா செய்தி மலர் ...



நம் பள்ளி சிறக்க வேண்டும்

1970ம் ஆண்டு முதுகலை பொது வேதியல் துறையில் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் படித்து, முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்று, அந்த கல்லூரியில் இரண்டு ஆண்டுகள் பணியாற்றினேன். அதன் பின்னர் ஈரோடு கலைக்கல்லூரியில் விரிவுரையாளராக பணியாற்றிய போது பல ஏழை மாணவர்கள் படித்து முன்னேற வழி வகுத்தேன். டாக்டர். சேதுபதி , டாக்டர். மாதேஸ்வரன் என்னுடைய அன்பு மாணவர்கள்.



**அமெரிக்காவில் மேல் படிப்பு** : அமெரிக்காவில் இருந்த என் நண்பர் ஒருவர் என்னை, அமெரிக்கா நல்ல நாடு. ஆராய்ச்சி செய்ய நிறைய வாய்ப்புகள் இருக்கிறது வா என்றார். நானும் 1980ம் ஆண்டு அமெரிக்காவில் உள்ள மார்குவேட் பல்கலைக்கழகத்தில் எம் எஸ். சிலிக்கான் கெமிஸ்ட்ரியில், படித்து முதுகலை பட்டம் பெற்றேன்.

அதன் பின்னர் பிஹெச்டி சிந்தெடிக் கெமிஸ்ட்ரியில் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் படித்து முடித்தேன். வாழ்கையில் நான் ஆசைப்பட்ட அனைத்து பட்டங்களையும் பெற ஆண்டவன் வழி காட்டினான். நான் எழுதிய இருபத்து ஐந்து ஆராய்ச்சிக்கட்டுரைகள் சர்வதேச ஆராய்ச்சி இதழ்களில் வெளியிடப்பட்டன.




**அமெரிக்காவில் வேலை** : நான்கு ஆண்டுகள் சவுத் கரோலினா மாநிலத்தில் உள்ள ஒரு மருத்துவ கல்லூரியில் துணைப்பேராசிரியராக பணியாற்றினேன். 1990 முதல் 2000 வரை சுபேல்கோ என்கின்ற அமெரிக்கா நிறுவனத்தில் முதுநிலைஆராய்ச்சியாளராக பணிபுரிந்தேன்.




**நான் 2002ல் தொடங்கி, ஆம்செம்டெக் என்ற சொந்த நிறுவனத்தை அமெரிக்காவில் நடத்தி வருகிறேன்**










எனது வளர்ச்சிக்கு வித்திட்டது குருசாமிபாளையம் செங்குந்தர் மகாஜன மேல் நிலைப்பள்ளி என்னை உருவாக்கிய சிற்பிகள் நம் பள்ளி ஆசிரியர்கள். எனது பள்ளிக்கு நல்லது செய்வது எனது தலையாய கடமை.

சென்ற முறை நான் என் மனைவியின் நினைவாக, ஒரு வகுப்பறை கட்ட உதவினேன். தற்போது நம் பள்ளி முன்னாள் மாணவர் சங்கம் மூலமாக குடிநீர் தொட்டி கட்டித்தர எனது நன்கொடையாக ஐந்து லட்ச ரூபாய் வழங்கியுள்ளேன்.

தைவான் மலேசியாவில் நடத்திய கருத்தரங்குகள்

ஏறும்புகள் எப்படி ஒன்று சேர்ந்து, ஒற்றுமையாய், பாடுபடுவது போல முன்னாள் மாணவர்கள் இணைந்து நம் பள்ளியின் முன்னேற்றத்திற்கு நம்மால் ஆன முயற்சிகளைச் செய்வோம்.